உ

சிவமயம்

# தில்லைக்கற்பகவிநாயகர்

# வெண்பாவந்தாதி

இது

பாண்டிநாட்டினுள்ளசோதிவனத்துட்சேர்ந்த

தேவிகோட்டையின்கண்

இளையாற்றக்குடிக்கோயில்பெருமரபூர்வகுப்பு

தி—வகை

வே. ஆ. தி.

மாயாண்டிச்செட்டியாரவர்கள்

குமாரர்

சிதம்பரச்செட்டியாரால்

இயற்றப்பெற்று,

சென்னை:

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

நளஹு சிம்மாவி.

1916.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செவியறிவுறூஉ.



கற்றன் சிதம்பரவேள் காசினியைப் பொய்யென்ற *
னுற்றன் கணபதியை யுங்துவன்போன் — மற்றநம்
வாக்குமனங் காயங்கள் மன்னும் பொருளெல்லாந்
நோக்கியுயிரி னைங்கானைத் தேர்ந்து.

சுவாமிநாதபண்டிதர்.

---

* காசினி பொய்யென்றன் முதலியவற்றை ௨௨-ம் செய்யுளிற் றொகுத்துக் கூறுமாற்றால் நன்குதெளிக. இச்செய்யுள் நித்தியாநித்தியவஸ்துவிவேகத்தை உணர்த்துமாறு காண்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.



தில்லைவாழந்தணர்களுள்

ஒருவராகிய

வைதிகசிகாமணி பிரம்மஸ்ரீ

## மா. கோபாலஸ்வாமிதீக்ஷிதரவர்கள்

இயற்றியது.

முதம்*பெருகச் செல்வ முறைபெருகச் சைவ
மதம்பெருகத் தேவைநகர் வாழந்—சிதம்பரவேள்
கல்லு முருகக் கழறினனேங் கற்பகமேந்
றில்லைவெண் பாமாலை தேர்ந்து.

காரைக்குடி வித்துவசிகாமணி

ம-ா-ா-ஸ்ரீ ராம. சொ.

## சொக்கலிங்கச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

பூவின் முதலாப் புகழ்தில்லைக் கற்பகத்தேந்
தேவின் முதல்வன் றிருவடிக்குப்—பாவின் [வைச்
முதல்வெண்பா மாலைதந்தான் முதுணர்ந்தோன் சே
சித†வண் சிதம்பரவே டேர்ந்து.

* முதம் - சந்தோஷம். † சிதம் - ஞானம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நூற் பயன்.

ஆத்திக*ரே நாளு மறையி னரோகதிட
காத்திரமே யீவன் கணபதியித்—தோத்திரத்தைப்
பாரும் விசும்பும் பாவும் பவமகலுஞ்
சேரு முமையேண் டிரு†.

---

* ஆத்திகர் இவர் என்பது. "பொன்னுலகம் வெந்நரகம் புண்ணியபா வப்புரிவார்—நின்மலனு முண்டென்று நிச்சயித்தா—ரிந்நிலைமை—யாத்திகரே யார்கண்டா ரம்மைப் பலமென்பார் — நாத்திகரென் றேயுளத்து ணடு" என்பதனாலுணர்க.
† எண்டிரு - அஷ்டலக்ஷ்மிகள்.

---

☞ இவ்வந்தாதியிற் சிலசெய்யுட்களுக்கு அரும்பதப் பொருளும் விஷயவிவரணமும் கூ௲—வது செய்யுட்கு மட்டும் விருத்தியுரையும் ஒவ்வொரு பக்கங்களினும் அடிப்பாகத்தில் அவ்வச்செய்யுளிலக்கத்தையிட்டு வரைந்துள்ளன! அன்பர்களனைவரும் [illegible]நோக்குவாராக.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைக்கற்பகவிநாயகர்

# வெண்பாவந்தாதி.



## காப்பு.

நேரிசைவெண்பா.

பொற்பொதுமே லைக்கோ புரத்துற் றெமையாளுங்
கற்பகவி நாயகன்பூங் காற்றுணைகட்—கற்போடுவெண்
பாமாலை சாத்தப் பதம்பொருள்செவ் வேயமைத்தக்
கோமானே யீவனருள் கூர்ந்து.

## நூல்.

உலகெலா முய்ய வுருவெடுத்துந் தேவ
திலகனே தில்லைநகர்ச் சீர்பூத்—திலகினான்
கைச்சுமுக னேரம்பன் கற்பகமென் பானவனே
நச்சிப் புரக்கு நமை. க

---

காப்பு—பொற்பொது - கனகசபை.

க. உலகெலாம் என்பது பெரியபுராணம் பாடும் பொருட்டுச் சேக்கிழார்சுவாமிகட்கு ஸ்ரீமந் நடராஜப்பெருமான் அடியெடுத்துக்கொடுத்த மங்களத்திருவாக்கு.

நமக்கார ஞ் செய்துதில்லை நாயகநீ யல்லா
லெமக்கார் துணையுமிலை யென்றேன்—சமக்கார
மேதுமறி யாததமி யேனையுமாண் டானிமய
மாதுசிவ காமி மகன். உ

மகம்புரியுஞ் சீர்த்தில்லை வாழுந் தணரே
யுகந்துபூ சிக்க வுவாவின்—முகங்கொண்டு
வேத விழுப்பொருளே மேவி னதன்பெருமை
யோத வுனவடங்கு மோ. ௩

ஓங்காரத் துட்பொருளை யுற்றூர்க் குறுதுணையாய்
நீங்காத தில்லையனை நேர்ந்துநெஞ்சே—சாங்காலத்
தஞ்சேலென் றோதி யபய மளித்துவந்து
குஞ்சரமே காவென் குதி. ச

குதவருத்தந் தீர்த்துக் கொடியேனை யாண்டா
னுதவியருட் கண்ணருகுற் றோம்பி—முதுபுலியூர்
மாபுரத்தின் மேலை மலைநிகர வோங்கிவளர்
கோபுரத்தில் வீற்றிருந்த கோன். ரு

---

உ. சமக்காரம் - மந்திரத்தாற்சுத்திசெய்யுங்கிரியை.

௩. உவா - யானை.

ரு. குதவருத்தம் - மூலநோய்.

கூ. மன்ற - நிச்சயமாக; "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்றூர் தொல்காப்பியனாரும்.

கோனைச் சபையிற் குனிக்கு மிறையளித்த
வானைத் தலையானை யன்பர்க்குத்—தேனை
மறவாதார்க் கின்னலற மன்ற வளரு
மிறவாத வாநந்த மே. கூ

வத்தி வணங்கு மெமையா ளுமையாட்கு
மூத்த திருப்புதல்வன் முன்னின்று—சோத்தஞ்செய்
வீரேற் புலியூர்க்கண் மேதினியீர் மேம்பட்டீ
ராரே யுமைநிகரு வார். எ

ஆர்த்த பிறவித் துயர்கெடுத்தே யாள்புலியூர்த்
தீர்த்தனுக் குத்தொண்டு செய்வதலாற்—பேர்த்துமொரு
கைம்மாறு முண்டோ கசாநநனை கைக்கோடி
யெம்மான் முடிந்ததிது வென்று. அ

என்னை புகுந்த தியாமிருக்க வென்றுமுனஞ்
சென்னை புகுந்தேனைத் தில்லையினி—லன்னையினு
மெற்கினியான் சேர்ப்பித் திரணத் திகப்பித்த
தற்கினியான் செய்வதுண்டோ சற்று. கூ

சற்றே செவிசொடுமின் சந்திரகாந் தக்கோமான்
முற்றும் புலியூர் முழுமுதல்சீர்—கற்றோராற்
கேட்ட வளவிற் கியாதி யுடன்பெற்றான்
வாட்டு பிணிதவிர்ந்த வாழ்வு. கo

எ. சோத்தம் - இழிந்தார் செய்யுமஞ்சலி.
க. சென்னை - சென்னப்பட்டணம். இரணம்—புண்.
கo. சந்திரக்காந்தக்கோமான் - சோமகாந்தமஹாராசன்.
சீர் முற்றும் கேட்ட வளவில் எனக்கூட்டுக.

வாழை வருக்கைகே மாவயல்சூழ் தில்லைநகர்ப்
பேழை வயிற்றுப் பிராற்கடிமை—யேழையேன்
செய்யப் புகுந்த தினந்தொடுத்துத் தேய்ந்ததுகாண்
மையற் பெருக்கின் வலி. கக

## விநாயகபராக்ரமம்.

வல்லைக்கு வாய்த்த மணமகனைத் தில்லையில்வாழ்
நல்லவர்க்கு நல்லவனை நஞ்சைவ—மல்லா
மதத்தவரும் போற்றுதலான் மாஇவனுய் நின்ற
விதத்தையுளத் தாய்த்துணரு மின். கஉ

மின்னனைய வேணிமுக்கண் வேழ முகந்துதிக்கை[செம்
பொன்னரைஞா ணைகதநகம் பூம்புலியூர்—முன்னவன்
கஞ்சமலர் கொஞ்சுங் கழலிணையுங் காக்குநமை
நெஞ்சகமே யஞ்சலென் னீ. கங

---

கஉ. சைவமொழிந்த புறச்சமயிகளும் போற்றுதலை "எல்லாப் பயனு மெளிதளிக்கு மியல்பா னிந்தப் பெயர்தம்மை, நல்லா கமத்தின் வழிநடக்கு நலியாச் சைவரே யன்றி, யல்லாச் சவுரர் சாத்தர் வயி ணவர்கண் முதலா மதத்தோருஞ், சொல்லா நின்று பயன்பெறுவர் துதிக்கை யானைத்துதியாரார்" என்னுந் திருவாக்கானுணர்க. மான் - யாவர்க்கும் பெரியவன், மஹான் என்னும் வடமொழி மான் எனவந்தது, இதனை "மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே" எனவருந் திருவாசகத்தானுணர்க.

கங. முன்னவன்—விநாயகர்.

நீதி சிறிதுமிலே னீசனேன் கோறல்கள
வாதி புரிபாவி யானுனுஞ்—சாதுசங்கத்
தோங்குவித்துத் தில்லையின்க ணுய்வுதவி நாயேனைத்
தாங்கினவன் விக்கினே சன். ௧௪

சநந மரணதுக்க சாகரமுந் தாண்டத்
தனதடியார்க் கோர்புணையாந் தாளா—னநகனெனத்
துங்கமறை சொல்லுஞ் சுமுகற் கிருப்பிடமாம்
பங்கமக றில்லைப் பதி. ௧௫

## அகம்பிரமவாதம் ஆகாதெனல்.

பதிபசுபா சப்பண்பைப் பாராள் சநகற்
கதிவிசுவா சத்தறிவித் தம்பொற்—பொதுநகரா
னுன்பிரம மென்றபசு ஞானநசிப் பித்தனன்யார்
காண்பரவன் காட்டாக் கடை. ௧௬

---

௧௬. சநகன்—மிதிலாபுரியிலிருந்த ஓரரசன். இவ்வரசனுக்குப் பூர்வபுண்ணியவசத்தாலும், நாரதமுனிவரது வேண்டுகோளாலும், ஸ்ரீ விநாயகப்பெருமான் எழுந்தருளித் திவ்ய தரிசனங்கொடுத்து, "இன்பமே விழைந்தும் வேட்டாங் கெய்தவே முயன்று மூடே—துன்பமே விடவல் லாந்துந் துளங்குமோ பிரமம் வேத—மன்புற மொழுக்கஞ் செய்வோ னரும்பய னளிப்போன் கூறு—நின்பிர மத்தை மன்ற நெருப்பிடா யென்று நீத்தான்" என்ற வண்ணமே நின்பிரமத்தை நெருப்பிலிடு என்றுகூறி இவர்கொண்டிருந்த அகம்பிரமக் கொள்கையை ஒழித்தும், ஆகமவழித்தீக்ஷைசெய்து திரிபதார்த்த நிச்சய ஞா

## எக்காரியாரம்பத்தினும் விநாயகாராதநம் இன்றியமையாததென்றல்.

*கடைந்து கடலைக் காள மெழக்கண்*
*டடைந்தார் சுராசுரர்முன் னாங்கவ்—தடைந்ததெவ*
*னென்னவினை விற்புலியூ ரேரம் பனைக்கடைமுன்*
*னுன்னாத காரணமே யொன்று.* ௧எ

னோபதேசம்பண்ணியும், சுத்தாத்துவித மோக்ஷத்தை அநுக்ரகித்தனர். இவ்வநுக்ரகம் பெறாத பூர்வகாலத்திலே இவர் கொண்டிருந்த மாயாவாத முதிர்ச்சிபற்றித் தங்கள் மதத்தரென எண்ணிப்போலும், இவ்வரசர்பிரானை மாயாவாதிகளெல்லாம், இற்றைஞான்றும், ஞானசநகன் ஞானசநகன் எனக் கொண்டாடிக் குதூகலிக்கின்றனர்; அந்தோ இவரது ஆராய்ச்சி இருந்தவாறென்னை? பாவம் பாவம். இதுநிற்க, அகம்பிரமமென்றல்! சிவபோதமாய் முடியுமே யன்றிச் சிவபோதமாகாதென்பதனை, "காதலினா னன்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" எனவருஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும், அது முடிவிற் சுகந்தராதென்பதனை, "மிண்டிய மாயா வாத மென்னுஞ் சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த்து" எனவருந் திருவாசகத்தானும், "தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே - நான்பிரமமென்பவர்பா னண்ணாதே" எனவும், "யானே யெவரு மானே னென்றலி-னவ்வவர் சிறிய வவ்வவர் வானாட் - செவ்விதி னிரயஞ் சேர்த்துவ ரதனுன் - மாயா வாதப் பேயா வுனக்குத் - தேவரி லொருவருண் டாக - மேவரு நரகம் விடுத்தலோ வரிதே" எனவும் வரும் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்கானும், "யாங்களே கடவு ளென்றிடும் பாதகத்தவரும்" எனவரும் தாயுமான சுவாமிகள் பாடலாலும் தெளிவா யறியலாம்; தவமிகுதியிருந்தால் இவ்வறிவு தலைப்படும்.

௧எ. காளம் - விஷம். கடை - முதனிலைத்தொழிற்பெயர்.

ஒன்றாய்ப் பலவா யுருவா யருவாகித்
தொன்றாய்ப் புதிதாகித் தொல்புலியூர்—நின்ற
கணபதியை நீங்காக் கருத்தினருக் கன்றே
குணமதிக மாமறிவு கூர்ந்து. கஅ

கூர்மமென வைந்தடக்கிக் கோலவுடல் கைத்திளமை
நீர்மே லெழுத்தா நினைந்துபுலி—யூர்மேவு
மைங்கரனை யுள்ளு மடியார்க் கொருபொருளோ
பங்கயன்மால் வாழும் பதம். க௯

பதஞ்சலிக்குக் கூத்துப் பரமபதி யீந்த
சிதம்பரத்தின் மேலைச் சிகரி—நிதம்பயிலுந்
தந்தா வளத்தையிரு சார்புகெடச் சார்ந்தாரே
நந்தா வளத்தையுறு நர். உ0

நரம்புகுட ரென்பூ னகடயிர்செஞ் சோரி
பரம்பியதோல் கொண்டு பருத்த—குரம்பை
யரியவற்று ளெல்லா மரிதாம் புலியூர்ப்
பெரியவனைப் போற்றப் பெறின். உக

---

க௯. கூர்மம் - ஆமை. கைத்து - செல்வம்.

உ0. தந்தாவளம் - யானை. இருசார்பு - உயிர்ச்சார்பு பொருட் சார்புகள்;

உக. சோரி - இரத்தம்.

பெற்றம் பெருஞ்செல்வம் பெண்டிர்பிள்ளை காணிமனை
மற்றுமுள கூட வருமோவாழ்—வற்றபொழு
தாதலாற் றில்லைதொழீ ரானை முகத்தூம
கேதுவே நீங்காக் கிளை. உஉ

கிளைத்தவன்னி பாசறுகு கேதமின்மந் தாரந்
திளைத்தசுக சித்திபுத்தி சேர—வளைத்திருந்து
பேணுங் கணேச பிரான்வடிவைத் தில்லைபுக்குக்
காண விரும்புவதென் கண். உ௩

கணுநீச னைக்கரும்பைக் கற்பகத்தைக் கண்ணைக்
குணநீத னைம்மறைகள் கூற—வொணுதகன்ற
நீரானை நித்தியனை நின்மலனை நந்தில்லை
யூரானை நெஞ்சமே யுன். உ௪

---

உஉ. தொழீர் முன்னிலைப்பன்மை ஏவன் முற்று. தூம கேது - விநாயகர் திருநாமத்தொன்று; எம்பெருமானுக்கு. அந்நாமம் வந்தமைக்குக் காரணம் "நாம வான்படை யமைச்சா மைந் தர்களொடு நண்ணுந், தூம னுருயிர் தூமத்தாற் றொலைத் துயர் வெற்றி, வாம மார்கொடி நாட்டலின் வள்ளலார் தமக்குத், தூம கேதுவென் றொருபெயர் துலங்கிய தெங்கும்." எனவும், வாட்ட மின்றிவாழ் தூமனு மன்னவன் கேடு, காட்ட லுற்றவுற் பாதமாய்க் கதித்திட லானு, நாட்டு மப்பெயர் சிறந்தது நறையு மி ழிதழிப், பாட்ட ளித்தொடை வேய்ந்தருள் பாலசந் திரத்திற் கே" எனவும் வருஞ் செய்யுட்களா னுணர்க. நீங்காக்கிளை- உயிரைவிட்டுப்பிரியாத சுற்றம்.

உனக்குப் பிழைக்கு முறுதியுரைப் பேன்கேண்
மனக்குரங்கே போகதரு வாவி—வினைக்கெடேல்
சேவித் திருகாத்தாற் றில்லைநகர்க் கற்பகத்தைப்
பாவித் திருநீ பரிந்து. உரு

பரிபுரத்தாட் பார்ப்பதிசேர் பாகத்தன் மேனாட்
டிரிபுரத்தைத் தீத்துவக்கத் தில்லைக்—கரிவதனப்
பிள்ளைசகா வேண்டுவனேற் பின்னெவர்கட் கன்னவனை
யுள்ளாது வேலைமுடி யும். உசு

உம்பர் முநிவ ரொழிந்தோருங் கற்பகப்பே [ளைக்
ரெம்பெருமான் றில்லையின்க ணெய்தினாற்—செம்பொரு
காணுமறி வேய்வார் கநகவரை யுற்றபல
பூணுமொரு பொன்னிறமே போல். உஎ

---

உசு. உள்ளாது - எதிர்மறை வினையெச்சம்.

உஎ. செம்பொருள் - பதிலக்ஷணமுழுதுமமைந்த பரம்பொருள்; செம்மை எண்டுப்பதிலக்ஷணம்; அவை தன்வயத்தனாதல் முதலிய இறைமைக்குணங்கள் எட்டுமாம். இக்கருத்தானே "எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை" எனத்திராவிட சுருதியுங் கோஷித்தல் காண்க. இனி, தோற்றக்கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையிற் றூய்தாய், தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றி அதனைச் செம்பொருள் என்றார்"; எனப்பரிமேலழகர் உரைக்குமாறு "பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ் - செம்பொருள் காண்ப தறிவு" என்னும் திருக்குறளுரையிற் காண்க. பல-குறிப்பு வினையாலணையும் பெயர்.

போலி யெழுத்தைப் புலவர்கொளு மாறெனவூர்க்
காலியென நின்ற கடையேனைக்—கோலி
யடியார் குழாத்துடன்சேர்த் தாண்டதுகாண் டில்லைக்
கடியார் கருணைக் கடல். ௨௮

கடலனைய வங்கனையார் கண்வலையிற் பட்டிங்
குடலைநிலை யென்றுநெஞ்சே யுன்னி—விடலை
சலம்போ தறுகாற் சபரியைசெய் தில்லை
யிலம்போ தரனை யினி. ௨௯

இனிய வுளவாக வின்னாத கோட
னனிபேதை நீர்மையெனு நன்றா—லுனிலற்றே
யற்ப சுகத்தை யவாவிநெஞ்சே நீதில்லைக்
கற்பகத்தை விட்ட கணக்கு. ௩௦

## விநாயகபரத்துவம்.

கணக்கறுபுன் றெய்வமெவர் கைதொழினு மந்த [கும்
வணக்கமிவற் காமறைநூல் வாழ்த்திப்—பிணக்கொழிக்
பொற்பொதுவி நாயகப்பேர் பூணலினு மாம்பரமங்
கற்பகத்திற் கோர்மின் கருத்து. ௩௧

---

௨௮. கடி - விளக்கம்.

௨௯. அங்கனையார் - பெண்கள். சபரியை - பூசை.

௩௧. இச்செய்யுளின் முன்னடி இரண்டற்கும். இத்தனை யென்றெண்ண வொண்ணாமற் பல்கிய சிறுதெய்வக் குழாங் களை எச்சமயத்தவர் வணங்கினும் அவ்வணக்கம் இப்பெரு மானுக்கே யுரியவாம். வேதாதி நூல்களும் இவ்வாறு பரத்துவங் கூறித்துதித்துப் புறச்சமயவாதத்தை அகற்றுகிற்கும். என்பது

கருவுற்ற நாண்முதலாக் கற்பகத்தை யல்லா
லொருபற்று மில்லையென்றெ னுள்ள—முருகிற்றத்
தோன்றலருண் மிக்கணுக்கத் தொண்டனெனத் தில்லையின்க
ணேனென்று கொண்ட தம்மா வெனே. ௩௨

---

பொருள்; "அதிசயம் பயக்கு நாராயணவுப நிடதம் யாரை-மதியினிற் குறித்தி யாவர் வணங்கினுமவ்வ ணக்கந் - துதிகெழு நினைவே யென்று சொலும்." என்றார் பிறரும்; இனி, பின்னடி யிரண்டற்கும் பொற்பொது விநாயகப்பேர் பூணவி னும் பாமம் கற்பகத்திற்கு ஆம் கருத்து ஓர்மின் என அந்வயப்படுத்தி, அஃதன்றிக் கனகசபையின்கண்ணேயும் விநாயகநாமத்தைத் தனக்கேயாய் வழங்கத் தரித்தமை யானும் பாத்துவம் இக்கற்பக மூர்த்திக்கே உரியதாகும் இவ்விரண்டனையும் கருத்தினால் உய்த்துணர்மின்கள் என்பது பொருள். நாயகன் - தலைவன்; விநாயகன் என்பதற்குத் தனக்குமேலொரு தலைவனின்றித் தானே யாவர்க்குந் தலைவனாய் நிற்கும் விசேஷமுடையானென்பது பொருள். இக்கற்பக மூர்த்திக்கு விநாயகநாமம் சர்வலோக நிவாதப்ரபலமுடைத்து என்பதைக் காட்டுவதற்கு இவ்வுலகத்துப் பல வியஷ்டிஸ்தலங்களைப்பார்க்கிலும் ஆநந்ததாண்டவஞ்செய்யுஞ் சிவபிரானாலும் செய்விக்குஞ் சிவகாமிப்பிராட்டியாராலும் தரிசிக்கும் முப்பத்துமுக்கோடிதேவர் நாற்பத்தெண்ணாயிரமிருடிகள் ஏனைச்சிவகோடிகளாலும் நிறைந்துள்ள மஹோந்நத சமஷ்டிஸ்தலமாகிய சிதம்பர கனகசபையே தக்க சதசென்பதையும் அறிக.

௩௨. அணுக்கத்தொண்டன் - சமீபித்ததொண்டன்; இதனை "ஆரூரமாக மணிந்தபிரா னன்ப ரணுக்க வன்றொண்டர்" எனவரும் பெரியபுராணச் செய்யுளானுணர்க. அருள் என்றுகொண்டது எனக்கூட்டுக.

எனைத்து மறப்புரியே னேதமிழைப் பேனென்
றனைப்புகழச் சற்றுஞ் சலியேன்—வனத்தில்லை
முன்னவனே யென்கொலிந்த மூர்க்கனைக் காருணிய
மன்னிப் புரந்த வகை. ௩௩

வகுப்பது மொன்றையியன் மற்றொன்று மொன்றைப்
புகுப்பது மொன்றைப் புரியா—திருப்பதும்
போந்தின் றடியேற் புரந்து புலியூர்வாழ்
சேந்தன் றமையன் செயல். ௩௪

செயற்கை யறிவுஞ் செகத்திற் சிறந்த
வியற்கை யறிவ மிரண்டுஞ்—சயப்புலியூர்க்
கந்தாக் கிரசா கணேசா கறைக்கண்டன்
மைந்தாவென் பார்க்கு வரும். ௩௫

---

௩௪. இச்செய்யுளில் "ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைமற் றொன்று செய்கை" என்ற திரிகர்த்ருத்வங் கூறப்பட்டது. இருத்தல் - அகற்றுதல். சேந்தன் - கந்தஸ்வாமி.

௩௫. செயற்கையறிவு - நூற்சார்புபற்றிவருவது. இயற்கையறிவு - தெய்வந்தரவருவது. இதனை, "மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம் - யாவுள முன்னிற் பவை" என்னுந் திருக்குறளானு முதலியவற்றானு மறிக.

வரும்போதென் செய்வாய் மனனேபொன் மன்றத்
தரும்போ தறுகுதக மாங்—கரும்புகனி
மோதகங்கொண் டானை முகத்தனைப்போற் றாய்நம்மைக்
காதல் கருதிமடங் கல். கசு

கற்றென் பிறர்க்குரைத்தென் கற்பகவி நாயகனார்
நற்றா ளுபய நளினத்தை—முற்றப்
* பதித்திலைகாண் டில்லையுற்றும் பாவிநெஞ்சே நிற்கு
விதித்ததெவ ரிந்த விதி. கஎ

விதிமுதன் மூவர்க்கும் விச்சுவ ரூபந்
துதிசெயக் காட்டித் தொழிலி—னதிகாரந் *
தந்தான் சதாசிவனைச் சத்திசித்தி புத்திமணத்
தெந்தையென்னுந் தில்லை யிறை. கஅ

இறையொன் றகா மிதாவெழுத் தெல்லா
மிறைவதென வெங்கு நிலாவு—மறைமுடிவி
லேகமெனு தத்துவித மென்றபுலி யூரானிறை
யாகு மடிமையகி லம் கக

---

கசு. காதல் - கொல்லுதல். மடங்கல் - இயமன்.

கக. இறை ஒன்று என்பதற்குப் பதியொருவனே எனப் பொருள் கொள்க. மறை பால்பகாவஃறிணைப்பெயர். எனுது எதிர்மறைவினையெச்சம். என்ற—வினைமுற்று.

அம்பு திடபத்தி யாடை வயிராக
முண்ப துயிர்ப்போத மோர்மைதில்லைச்—சம்புமக
னா தனத்திற் கணிசாந்த மெய்யலரா
னாரே யவைதொடுக்கு நார். ௪௰

நாரணனுங் காணா நமாது பரமபதி
காரணனாந் தில்லைக் கணபதி—போரமா
சேனா பதிக்குமுன்னோன் சீர்பாவி னோமுயர்ந்தோ
நாநா விதத்துமினி நாம். ௪௧

நாமே வரும்படிக்கு நண்ணுநா தார்தபதம்
பூமே விடர்போம் புலியூர்க்க—ணீமனமே
வீரைப் பரப்பின் விரிவிக் கிநராசன்
சீரைப் பாவித் திரி. ௪௨

திரிசிரசுப் பேர்வே தியற்கு மனையாள்
விரோசனைக்கு மன்பை வியந்தேற்—றொருதூர்வை
யின்பமளித் தான்புலியூ ரோம்பற் குண்டோமெய்
யன்பினினு மேலா யது. ௪௩

---

௪௰. அம்பு - ஜலம். வயிராகம் - வயிராக்கியம். உயிர்ப் போதம் - சிவபோதம். ஓர்மை - ஏகாக்ரசித்தம். மெய் - சத்தியம். நார் என்னும் இரண்டில் முன்னையதற்கு அன்பென்பது பொருள்.

௪௨. மேவருதல் - மேவுதல்; ஒருசொல்.

௪௩. தூர்வை - அறுகம்புல்.

அதிர்த்தியற னோற்பார்க் கருட்புலியூ ரெம்மான்
சதுர்த்திவிர தம்மொன்றே சாலு—மிதத்தையுமை
நற்றவரு னோற்று நாருஞ் சாருமுடிக்
கொற்றவரும் பெற்றமைநூற் கூற்று. ௪௪

கூற்றுக் கொடியன் குறுகிற் பெருச்சாளி
யேற்றைக் கடவி யெதிர்வந்து—நாற்றிசையும்
போர்ப்பப் புகழ்புலியூர்ப் புண்ணியா நாயேனைக்
காப்ப தொருநின் கடன். ௪௫

கடனடியேற் கம்ம கனக சபையி
னடநவிலோ தற்குமைந்த நாயே—னுடனிகழு
மாத்த வுனையித்தே காந்த பரியங்கம்
வாழ்த்தி வணங்கு வது. ௪௬

---

௪௪. உமை - பார்ப்பதி. நூற்கூற்று - புராணவசனம்.

௪௫. கூற்று - இயமன். புகழ்போர்ப்ப எனக்கூட்டுக.

௪௬. உடனிகழ்தல் கண்ணொளியின் ஆன்மபோதம் போல உயிர்க்குயிராதற்றன்மை என்க. இதனை "உலகெலா மாகி வேறா யுடனுமாய்" என்ற சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னுணர்க. ஆப்தனென்னும் வடமொழி ஆத்தனென்றாகி விளியானீறுகெட்டது.

## அடியார்க் கமுதுசெய்வித்தல்.

வதன மலர்ந்து வழங்கியுப சாரம்
பதனருத்தி யைங்கரனன் பர்க்கு—நிதமகிழ்வார்
மண்ணிற் பிறந்தபயன் வாய்ந்துபுலி யூர்க்கபில
வண்ணற் குரியவரா வர். ௪௭

அருக்க னலவ னசவா கனமூன்
றுருக்கெசுர் சாம மிவையுந்—திருக்கா
நகரி யாசாய் நகுதில்லை மேலைச்
சிகரி யுறைகணப திக்கு. ௪௮

திக்குப் பதிவந் திதனைச் சிதம்பரத்துட்
புக்கு வணங்கும் பொழுதுபரி—பக்குவமா
யுள்ள முருகிற் றுரோமஞ் சிலிர்த்ததின்ப
வெள்ளம் பெருக்கெடுக்க வே. ௪௯

---

௪௭. பதம் - சோறு; அது பதனெனப் போலியாயிற்று. மண்ணிற் பிறந்த பயன் வாய்த்தலை "மண்ணி னிற்பிறந் தார் பெறும் பயன்மதி சூடு - மண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்" எனவரும் பெரியபுராணச் செய்யுளா னுணர்க.

௪௮. அருக்கன் அலவன் அசவாகனன்-முறையே சூரியன் சந்திரன் அக்கினி. திருக்கு—கண்.

௪௯. திக்குப்பதிவந்திதன் என்பது விநாயகசகஸ்திரநாமத் துளொன்று.

வேதா கமந்தில்லை மேய விநாயகனைத்
தாதா பரம தயாளுவெனு—மீதுணர்ந்துங்
காலத் தவனைக் கடைப்பிடியா நாளெல்லா
ஞாலத்து நாம்பிறவா நாள். ௰

நாளுமுயர் பல்வி நகரியுறை வைசியவல்
லாளன் விளையாட் டயர்பூசை—தாழாது
மேவியேன் றாள்புலியூர் மேய்விகடற் கர்ப்பணமாம்
பாவியேன் செய்யும் பணி. ௰க

பணிக்கரசைத் தன்னுதர பந்தனமாக் கொண்டென்
பிணிக்கரசி கத்தைப் பெருக்கித்—துணித்தபிரா
னிந்நாண் முதனும மீரொட்டி ஞலைழத்தா
லெந்நாள் வருவா னெதிர். ௰உ

---

௰. காலத்துக்கடைப்பிடிக்க வேண்டுமென்பதனை "கால மூண் டாகவே காதல்செய் துய்மின்" எனவரும் திருவாசகத்தா னுணர்க.

௰க. விகடன் என்பது விநாயகர் சோடசநாமத்தொன்று. பூசை விளையாட்டினுற் செய்யப்பட்டதேனும் எம்பிரான் ஏற் றது உண்மை என்றறிவித்தற்கு மெய் என்னும் விசேடணங் கொடுத்துக் கூறப்பட்டது. சத்தாயுள்ளவன் எனினும் அமை யும்; சத்தென்னும் பொருட்பேற்றை, "பூவண்ணம் பூவின் மணம் போலமெய்ப் போதவின்ப - மாவண்ண மெய்கொண்ட வன்" எனவரும் திருவிளையாடற் புராணச் செய்யுளா னுணர்க.

௰உ. பணிக்கரசு - ஆதிசேஷன். உதரபந்தனம் - வயிற் றணி. எம்பெருமானுக்கு அவ்வணியுடைமையை "அகட சக்

எதிர்நிற்கு மாற்றலரின் லில்லை யிருட்குக்
கதிர்முன் புலியூர்க் கணேசா—பதிமுனுயிர்ப்
பாசவலி குன்றுமெனப் பாவிப்போர் திவ்யசுக
வாசமெனக் கென்றும் வழங்கு. ௫௩

வழக்கிட்டாண் டானையன் வன்றொண் டரைமுன் [ன்
புழைக்கைமுகன் றந்திரமாய்ப் போக்கிச்—சழக்கனையு
ளுக்கங் கொடுத்துப்பொய் யோலைவிவ காரமின்றி
யாக்கினான் மீளாத வாள். ௫௪

---

கர விண்மணி யாவுறை - விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்'' [redacted] வரும் காஞ்சிபுராணச் செய்யுளா னுணர்க. அரசிகம் - உவப்பின்மை. துணித்தல் - சேதித்தல். ஈரெட்டு நாமங்களாவன. சுமுகர், ஏகதந்தர், கபிலர், கசகன்னர், இலம்போதரர், விகடர், விக்நராசர், கணாதிபர், தூமகேது, கணாத்தியக்கர், பாலசந்திரர், கசாநநர், வக்ரதுண்டர், சூர்ப்பகன்னர், ஏரம்பர், கந்தபூர்வசர் என்பனவாம். இவைகள் இவ்வந்தாதியில் முறையே—௧, ௩, ௪௭, ௧௧, ௨௧, ௫௧, ௪௨, ௭௧, ௨௨, ௧௪, ௫௮, ௮, ௩௫, ௮௩, ௧, ௩௫, ஆம் செய்யுட்களில் வைக்கப்பெற்றன. இவற்றுட் சில நாமம் பல இடத்து வைக்கப்பெற்றுமிருக்கும்; இவைகளை வித்தை, விவாகம், கிரகப்பிரவேசம், யாகம், யுத்தம், யாத்திரை, வியாபாரம், வியவசாயம் முதலிய எவ்வெக் காரியாரம்பங்களிலும் விநாயகதியானத்துடன் உச்சரித்தால் அவ்வக் காரியங்கள் நிர்விக்கினமாய்ப் பூர்த்தியடைவது நிச்சயம்.

௫௩. பாவிப்போர் - சைவசித்தாந்திகள்.

௫௪. ஐயன் - தனது பிதாவாகிய சிவபெருமான்,

## நாடிவழக்க வேண்டுகோள்.

ஆளி மயூரமட லாகூருந் தில்லைநகர்
மீளி செலுத்துகவென் வேண்டுகோ—ளானுமநு
கூலச் சுழுனை குலாவமதி வைத்துரிய
காலத் திடைபிங் கலை. ருரு

ருரு. இச்செய்யுளின் உரைவருமாறு:—அடல் ஆளி மயூரம் ஆகு ஊரும் தில்லை நகர் மீளி - வலிமைபொருந்திய சிங்கம் மயில் பெருச்சாளி என்னும் இவை மூன்றையும் வாகனமாகக் கொண்டு செலுத்துகின்ற தில்லைப்பதியி லெழுந்தருளிய அளவிலாற்றலுடைய விநாயகமூர்த்தியே, அநுகூலச் சுழுனைநாளும் குலாவ - சத்துவத்தொழிலெவற்றிற்கும் சாதகத்தைச் செய்கின்ற சுழுமுனைநாடியானது இடையீடின்றித் தினமும் நடைபெறும்படிக்கும்,—இடைபிங்கலை உரிய காலத்துக்(குலாவ) - ஏனை இடைகலை பிங்கலை என்னும் இரண்டு நாடிகளும் அவ்வவற்றிற்கு விதித்த காலங்களில் நடைபெறும்படிக்கும்,—மதி வைத்துச் செலுத்துக என் வேண்டுகோள்—உன்னுடைய திருவுள்ளம் வைத்துச் செலுத்தக்கடவை இதுவே எனது கோரிக்கையாம் என்பது பொருள். குலாவ என்பது வேறிடத்துங் கூட்டப்பட்டது. சுழுமுனைநாடி சத்துவத்தொழி லனைத்திற்கும் சாதகமாயுள்ளதென்பதனை ''எல்லா வினைக்கு மினிது சுழுனையெனச் - சொல்லாய்வார் தேர்க துணிந்து'' எனவரும் சைவசமயநெறிக் குறளானுணர்க. அவன் திருவுள்ளம் வைத்தாலன்றி நமது கோரிக்கை முற்றுமையால் மதிவைத்துச் செலுத்துக எனச் சுட்டிக்கூறப்பட்டது. இதனை, ''கருப்பா சயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய - திருப்பாத மேதரு

கலச முனிவனது கைக்கமண்ட லோத
மலையக் கவிழ்த்துநதி யாக்கி—யிலைதளிர்பூ
வீன்மக வானீ ரிலாநந் தனத்துய்த்த
ஞானமுகன் றில்லையிறை யாம். ௫௬

ஆம்பல் பகன்மலர வார நிலாவெறிக்கும்
பூம்பழனத் தில்லைப் பொதுநடிக்குஞ்—சாம்ப
சிவன்மகனை யென்றுகண நீசனைநால் செப்பு
மிவனைவினை பேத மிலை. ௫௭

மோதெரியாது சிவன்செயலே" எனவும் "என்னெண்ணை மெல்லா மிமைப்போ தழியுமரன்—றன்னெண்ண மொன்றுமே தப்பாதால்" எனவும் வரும் ஆன்றோர் திருவாக்குக்களாலுணர்க. இடைகலை பிங்கலை நடத்தற்குரிய காலத்தை "வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதனிட-மொள்ளிய மந்த னிரவிசெவ் வாய்வலம் - வள்ளிய பொன்னே வளரும் பிறையிடந் - தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே." எனவும், "வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதன் மூன்றுந் - தள்ளி யிடத்தே தயங்குமே யாமாகி - லொள்ளிய காயத்துக் கூன மில்லையென்று - வள்ள னமக்கு மகிழ்ந்துரைத் தானே" எனவும் வருவனவாதியாகிய திருமந்திரச் செய்யுட்களாலுணர்க. யாவர்க்கும் நாடி வழக்கில் கருத்து இருக்கவேண்டுமென்பதனை" "வாசியின் மதிவைத் தார்க்கு வரம்பிலா நந்த நல்குந் - தேசிகன் றேவ தேவன் றிகம்பர னெழுத்தஞ் சுன்னி" எனவரும் விநாயகபுராணச் செய்யுளாலுணர்க.

௫௬. கலயமுனிவன் - அகத்தியமுனிவர். கமண்டலோதம் - கரகநீர். நதி - ஈண்டுக் காவிரியாறு - மகவான் இந்திரன்.

இலிங்கங் கொணர்ந்த விலங்கைக் கிறையைக்
கலங்கப்பந் தாடிக்கோ கன்னத்—தலங்குலவத்
தாபித்த வன்புலியூர்த் தண்பால சந்திரனே
சோபிக்கு மாறு சுரர். ருஅ

சுரசமூ கங்க டொழும்புண்ட ரீக
புரசமீ பத்தநிதம் பொய்யார்க்—கிரசவிழுப்
பேற்றுக் கனிபோலிப் பேதைசொலு மந்தாதி
யேற்றுத் தருதி யிதம். ருகூ

இதமார் கவுண்டின் னியநகரிற் றக்கற்
கதர்வினைச் சென்றதா சாட்சி—மதினீர்க்
கடியாருந் தில்லைக் கணேசன் கழல்சே
ரடியார்க் கெதுதா னரிது. கூ0

அரும்பற் றுடையா ரகலாத தெய்வப்
பெரும்பற்றத் தண்புலியூர் பேணுங்—கரும்பனைக்கைப்
பேழை வயிற்றுப் பிரானே பிரசன்ன
வேழ முகனே விபு. கூக

---

ருஅ. கோகன்னத்தலம்-கோகர்ணம் என்னும் க்ஷேத்திரம்.

கூ0. அதர் - வழி.

கூக. விபு - எங்குநிறைந்தவன்.

எந்நூலும் விநாயகர் காப்பின்றி முற்றுவேனல்.

புத்தியவ லத்தைப் புராணமீ ரொன்பான்சொல்
சத்தியவ திக்குமகன் சார்ந்துபா—சித்திவினை
மூட்டின் றுரைத்தான் முதற்புலியூர் முன்னோற்றுக்
கட்டுரைப்பீர் காப்புக் கவி. சுஉ

விநாயக பக்திமான்கட்கு நவக்ரஹமும்
நலஞ்செய்யுமென்றல்.

கவியிந் திரவிசிகி காரி கறுப்புப்
புவிமகன் சீவன் புதன்கோ—ணவவர்க்கம்
வந்தடர்க்கா நன்னிலைமன் னும்புலியூர் வாழேக
தந்தனடிச் சார்ந்தார் தமை. சுங

தமாலமகி லாரந் தழைதில்லை யானே
யுமாசுதனே சிற்பரவி யோமத்—திமாசலநேர்
மேக்குச் சிகரி விளங்கும் விநாயகனே
போக்குவர வற்ற பொருள். சுச

சுஉ. அவலம் - சோர்வு. சத்தியவதிக்குமகன் - வியாச முனிவர்.

சுங. கவி - சுக்கிரன். இந்து - சந்திரன். இரவி - சூரியன். சிகி - கேது. காரி - சனி. கறுப்பு - இராகு. புவிமகன் - செவ்வாய். சீவன் - வியாழன். புதன் - புதன். ஆக இவை ஒன்பது வகைக் கிரகங்கள்.

சுச. சிற்பரவியோமம் - சிதம்பரம். மேக்குச்சிகரி - மேலைக்கோபுரம்.

பொருளைப் பிணைவைப் புவியை விரும்பி
யருளைப் பெறுதலெதி யந்தோ—தெருள்புவியூ
ராதிக் கணபதியை யல்லா லகவிருள்யார்
சேதிக்க வல்லுநர்நெஞ் சே. உ௫

சேயேன்வின் ணப்பஞ் செவிக்கேறச் சித்திபுத்தித்
தாய்மார் கணபதிக்குச் சாற்றிலரோ—கோயிற்
பதிக்கினியான் வேட்டதரப் பாணிப்ப தென்னே
மதிக்கி னுருகு மனம். உ௬

மகாதிகளுக் கெட்டா வரதனுயர் தில்லை
யகாதிமுத்த சித்தருவா னெங்கை—விநாயகன்சீர்
பூரித் துளதேற் புகன்றவர்போல் லாரேனும்
பாரித் துலகுகொளும் பா. உஎ

---

உ௫. பிணை - ஈண்டு உயர்திணைப்பெண். தெருள் - அறியென்னேவல்.

[redacted] கோயில் - சிதம்பரம்; இத்தலமொன்றே அடைமொழியின்றிக் கோயில் என்னுமளவில் தன்னையுணர நிற்கும் பெருமை யுடைத்தெனவறிக. வேட்ட - வினையாலணையும் பெயர்.

உஎ. பூரித்தல் - நிறைத்தல். பாரித்தல் - கனப்படுத்தல்.

## அறுகின்பெருமை.

பாசறுகே தில்லைப் பதியாற் குரித்ததன்சீர்
பேசரிதோர் புல்லெடையாம் பிங்கலம்பெற்—றாசிரையை
மேவெனக்க வுண்டினியன் விண்ணனுப்ப வியவொணர்
தேவருற்று ரிம்மே தினி. ௬௮

தின்னுகென வெள்ளித் திருமலையின் மூவிரண்டு
சென்னியற்கு மின்றிச் சிவன்கொடுப்பத்—தன்னை
யுழுத்தருண்மூற் சூழ்ந்துபுலி யூர்ச்சுமுக னுண்டான்
பழுத்தொழுகு தேமாம் பழம். ௬௯

பழக்க மிகப்பெரிது பாறையினுங் கோழி
கிளைக்கு மதுபோற் கிராத—வுளப்பே
யசத்தவா மென்சொலினு மாய்தில்லை யாயுன்
வசத்தவாய் நிற்க வசி. ௭0

வசித்துவமீ றகவணி மாமுதலா மெட்டு
நசித்துவினை யோட்டெடுப்ப நாளும்—விசித்திரமாய்ச்
செய்தொழுகுங் குற்றேவ றில்லைக் கணபதியைக்
கைதொழுப வர்க்குக் கசிந்து. ௭௧

---

௬௮. பிங்கலம் - பொன். ஆசிரையை - கவுண்டிந்யமுனி வருடைய பாரியை.

௬௯. மூவிரண்டு சென்னியன் - கந்தஸ்வாமி. உழுத்து - உழுந்தென்னுஞ் சொல்லின் வலித்தல் விகாரம்.

௭0. வசி - வசியப்படுத்தியருள் என்பது பொருள்.

சிந்து வொடும்போர் செயும்போ திவர்சிகியைக்
கந்தற் கருள்புலியூர்க் கற்பகமே—சிந்தை
விழியான் விலக்கு விதியறிய வேத
மொழியுங் கருணைக்கொண் மூ. எஉ

## விநாயகப்ரசாதம் சந்நிதியிற் சிறுவர்க் களிப்பது விசேஷமென்றல்.

மூடிகமூர் தில்லை முதல்வன் றிரிசந்தி
வீடுதொறுஞ் சேயாய் விளையாட—காடியையர்
சிற்றுணு வீந்தார் சிறார்க்களித்தா னவ்வழக்க
மற்றைமுதன் மேம்பாட்ட தாய்த்து. எ௩

ஆயாதார் தேறற் கரியா னருட்டில்லை
மாயா ரகிதன் மலைமகள்சேய்—மேயவுயிர்ப்
பந்தம் பிரியப் பரித்தனனுற் பல்லுயிர்க்குஞ்
சிந்திதனே யான திறம். எச

திறவாது வாயைச் சிரமசைத்துச் செல்வத்
திருமாந்து கற்றறியா வீன—ருறவாடா
தண்ணல்கோ யிற்சுமுகற் கன்பரைச்சேர்ந் தின்புற்றார்
திண்ணியரா யுள்ளார் சிலர். எரு

---

எஉ. சிந்து - அசுரத்தொழிலையுடைய ஓரரசன். சிகி மயில். கொண்மூ - மேகம்.

எ௩. மூடிகம் - பெருச்சாளி. திரிசந்தி-ஒருநகரம். ஐயர் முனிவர்.

சிலையரிவை செய்தோன் சிலைசயிக்கக் கண்டீர்
மலையரவே யானான் வடிவஃ—திலையாகப்
புங்கநிரி யாணம் புரிந்ததுகாண் டில்லைநகர்த்
தங்குமிரு தாட்குஞ் சரம். ௭௬

சராசரங்கள் பூசைதனைத் தாபித் தியற்றி
யிராறுதிரு நாமமிட வேற்றான்—விராவு
திணையாந் திருவுருவன் றில்லையார் றீனர்
துணையா னடேச சுதன். ௭௭

சுதரிசனன் வேதன் சுநாசிர னாதி
யிதாசுரர் வேண்டுதலு மெம்மான—மதுரப்
புனலசும்புந் தில்லைப் புழைக்கைமுக னுண்டான்
கனலசுரன் றன்னைமுன்னங் காந்து. ௭௮

---

௭௬. சிலையரிவைசெய்தோன் - கல்லைப்பெண்ணாக்கின விட்டுணு. கண்டீர் - கண்ணில்லாத. நிரியாணம் - யானைக் கடைக்கண்.

௭௭. இராறுதிருநாமம் - ௬௨-வது செய்யுளிற்கூறிய பதினாறுநாமத்துள் முன்னைய பன்னிரண்டுநாமங்களுமாம். விராவுதிணை - உயர்திணை அஃறிணைக் கலப்பு. சுதன் - புத்திரன்.

௭௮. சுதரிசனன் - விட்டுணு. சுநாசிரன் - இந்திரன். அசும்புதல் - இடையறாதொழுகுதல். கனலசுரன் - அநலாசுரன். அங்காந்து - வாயைத்திறந்து.

## பெருச்சாளிவாகனவரலாறு.

காந்தருவ மன்னுங் கயாசுரனு மாகுமெனப்
போந்தா நிருவர் புறத்தேறி—யூர்ந்தனனால்
வள்ளலார் தில்லை வழாதுறையுங் கற்பகப்
பிள்ளையா ரென்னும் பிரான். ௭௯

பிரணவமுன் ஞேதப் பெறுமநுக்க ளெல்லாம்
பிரணவமே ரம்பமெனப் பேசு—நிருணயத்தாற்
றேரோடு வீதிதிகழ் தில்லை விநாயகன்சீ
ராரோதுந் தன்மையவொன் ணு. ௮௦

ஆகாவுந் தும்புருவுங் காசிபர்த மாச்சிரமத்
தூகூவும் பூசித் தறுங்காற்றி—வாகான்முற்
சேட்டுருவைந் தைத்திரோ தித்துத்த ஞேருருவிற்
காட்டியது நங்கற்ப கம். ௮௧

---

௭௯. காந்தருவமன் - கிரவுஞ்சனென்னுங் கந்தர்வராசன்.

௮௦. மநு - மந்திரம். நிருணயம் - தேற்றம். நிர்ணயம் என்னும் வடமொழி அவ்வாறாயிற்று.

௮௧. ஆகா - [illegible] - தும்புரு - இம்மூவரும் திருக்கைலாயமலையில் இன்னிசைபாடும் கந்தருவர்கள். திவாகரன் முன் சேட்டு உரு ஐந்து - ஆதித்தன் கணபதி, அம்பிகை, சிவன், விட்டுணு. என்னும் ஐவருடைய, பெருமைவாய்ந்த வடிவங்களைந்தென்க.

கமடவுரு வாய்ப்போங் கமலை கணவன்
மமதைகெட வோடரிந்து வாங்கி—யமலணியாய்ச்
செந்தியார் வேள்விதிகழ் தில்லைநகர்க் கற்பகப்பேர்த்
தந்தியே தந்தனுதந் தைக்கு. ௮௨

தையல்சிவ காமி தலைமகனே யென்றழைப்ப
வையைமடி மீதிருந்தே யார்ந்துபால்—செய்துகைக
யேகதந்தன் சூர்ப்பகன்ன னெந்தைபுலி யூரனடித்
தோகையவட் கீவா னுவந்து. ௮௩

வந்து கபிலர் மடத்திற் கவர்தலுமுன்
சிந்தா மணியையபி சித்துமக—னந்திலதை
மீட்டளித்தான் றில்லை விநாயகன்வே றூனவற்றைக்
கூட்டவும்வல் லானெண் குணன். ௮௪

குணஞ்சிறிது மில்லேன் குடந்தம்பட் டந்தோ
வணங்க வபயம் வழங்கிக்—கணங்கட்
கதிபதியான் றில்லை யமலனுண் டானென்
மதிபதியத் தந்மயத்தை வைத்து. ௮௫

---

௮௨. கமடம் - ஆமை. தந்தைக்கு - தனது பிதாவாகிய சிவபெருமானுக்கு.

௮௪. அபிசித்துமகன் - அபிசித்து மஹாராஜாவின் குமாரனாகிய கணனென்பவன். அந்தில் - அசைச்சொல்.

௮௫. குடந்தம்படுதல் - நான்கு விரல் மடக்கிப் பெருவிரலிறுத்தி மார்பிடைவைத்தல். தந்மயம் என்பது அச்சிவமய மாதலென்னும் பொருளைத் தரும் வடமொழி.

## சிதம்பரதரிசநமகிமை.

வைகறையில் வீதிவலம் வந்துசிவ கங்கையெனும்
பொய்கைகுடைந் தக்கமணி பூதியணிந்——தைகசிவ
தாண்டவத்தி ேனாடுதில்லைத் தந்திமுக னைந்தினநாங்
காண்டலே மோட்ச கதி. அசு

கதிரிய மானன் கனல்வளி பூவிண்
மதிபுன லெட்டும் வடிவாங்——குதிகொள்ளத்
திண்மூ டிகஞ்செலுத்தித் தில்லையமர் கற்பகப்பேர்க்
கண்மூன் றுடைய கரிக்கு. அஎ

கரியா யனைத்திற்குங் காரணமாய்த் தில்லை
பிரியா விநாயகப் பெம்மான்——றுரியநிலை
மாண்டு பிறவா வகையுதவ முன்னின்றான்
வேண்டுவதென் யானினி மேல். அஅ

---

அசு. ஏகம் சிவம் தாண்டவம் என்பன ஐக சிவதாண்டவமென வந்தமை வடநூன்முடிபு; ஏகமென்னும் விசேடணத்தைத் தாண்டவத்திற் கேற்றுக. மோட்சகதி இச்சிதம்பரதலவாசமே என்பதனை "சிவலோக மாவதுவுந் தில்லைச்சிற் றம்பலமே" எனவருந் திருவிசைப்பாவானறிக.

அஎ. பூ - பிருதிவி. புனல் - அப்பு. கனல் - தேயு. வளி-வாயு. விண் - ஆகாசம். கதிர் - சூரியன். மதி - சந்திரன். இயமானன் - ஆன்மா. கரி - யானை.

அஅ. கரி - சாக்ஷி. துரியநிலை - நான்காவதுபடி.

மேதைக் கணிதனென மேய்ச்சார் தாவிசுவ
நாதற்குக் காசி நகர்திவோ—தாதவா
சுள்ளாந் திரித்தாங் குதவினோன் கற்பகப்பேர்
வள்ளலாந் தில்லை வனன். அகூ

வன்னாச் சிரமம் வழாதொழுக வென்றாலோ
வென்னாற் சிரம மினிமுடியா—துன்னடியைச்
சேவைசெய்த மட்டிற் றிருத்தியுற்றாத் தில்லையாய்
நீவழங்கு வீட்டு நெறி. கூ0

நெறியினில்லா ரேனுமவர் நீடு பவந்தீப்
பொறிகலந்த தூலப் பொருப்பின்—மறியுமிது
திண்ண மசலதிட சித்தமொடு தில்லையிற்போய்
நண்ணிற் கசகன் னனே. கூக

நனேபோ தடியிடே னுயினே னெள்ளத்
தனேபோ தமிலேன் றமியே—னினேபோதே
போந்தசுவ டின்றிமனம் புக்கதுகாண் டில்லைநகர்
வாழ்ந்தவகண் டாகார வத்து. கூஉ

---

அகூ. கணிதன் - சோதிடன். மேய் - அடைந்து என்னும் வினையெச்சம். திவோதாதன் - காசியை ஆண்ட அரசன். விசுவநாதற்குக் காசிநகர் சார்தர உதவினோன் எனக்கூட்டுக.

கூ0. திர்ப்தி என்னும் வடமொழி திருத்தியென்றாயிற்று.

கூக. தூலப்பொருப்பு - பஞ்சமலை.

கூஉ. சுவடு - அடையாளம். வஸ்து என்னும் வடமொழி வத்து என்றாயிற்று. வத்து - பொருள்; பதார்த்தமெனினும் அமையும்.

## விபூதிமகிமை.

வத்துவெலாம் வன்னி மருவிற் பசுமமா
மத்தைத் தகிக்கி னதுவேயாஞ்—சத்தமெனத்
தேறார் புறச்சமயர் தில்லையாய் நீறொழிய
வேறுகுறி மெய்யிடுதல் வீண். ௩௩

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்லெனலைப்—பேணோற்குத்
தில்லைக் கணுத்தியக்கா திக்குநினை யல்லால்வே
றில்லை யினியெனைநீ டேற்று. ௩௪

ஏற்றம் பெருக விருவினைபோ யீடழியத்
தோற்றந் தொலையச் சுகபவனப்—பேற்றையெற்குச்
சுண்டா நனுவாகா தொல்புலியூர் மேயவக்ர
துண்டா வளிப்பதென்று சொல். ௩௫

---

௩௩. இதற்கு விருத்தியுரை இறுதியில் ௩௧, ௪0, ௪௧, ௪௨, ௪௩—வது பக்கங்களில் எழுதப்பட்டது; ஆண்டுக்காண்க.

௩௪. இச்செய்யுளில் வீழ்நாள் என்பதுமுதல் கல் என்னுந் துணையும் ஒரு திருக்குறட்பா. திக்கு - பற்றுக்கோடு.

௩௫. சுகபவனம் - பேரின்பவீடு. சுண்டம் - யானைத் துதிக்கை. வக்ரதுண்டன் - மாறுபாடுகளை யொழிப்பவன்.

சொற்குழறி யையன் தொடர்ந்துவிழி பஞ்சடைந்து
பற்கருகிக் கந்தம் பதறவுயிர்—புற்கலத்தை
நீங்கும் பொழுதில்லை நின்மலா நாயேனைத்
தாங்கெனக்கு நீயே சதம். கூசு

## விநாயகர்திருவுருஎங்குமிருக்கும்இரகசியம்.

சதுக்க மறுகுபொழில் சந்திதடங் கூவ
னதிக்கரைமு னெவ்விடனு நண்ணு—மெதிர்ப்படுங்கான்
மன்பதைசிந் திப்பவற்றால் வான்செயன்மூற் றத்தில்லை
யும்பன்முகத் தெம்மா னுரு. கூள

உருக்கும வன்ம னுஞற்றும் புலியூர்த்
திருக்கோயில் வீற்றிருக்குஞ் செம்மால்—குருக்கோல
மீதரித்து வந்தியோக நிட்டையிலே பேதமற
லாதரித்துக் காட்டி யருள். கூஅ

---

கூசு. புற்கலம் - உடம்பு. கந்தம் - இந்திரியம்.

கூள. சதுக்கம் - நாற்சந்தி. சந்தி - முச்சந்தி ஐஞ்சந்தி. தடம் - தடாகம். கூவல் - கிணறு. உம்பல் - யானை. கரை என்பதனை, தடம் கூவல் இவற்றோடும் எடுத்துக் கூட்டுக.

கூஅ. உருக்குமவன்மன் - இரணியவன்மசக்ரவர்த்தி. யோகநிட்டை - தியானசமாதி - இது வாய்க்கப்பெற்ற பிறவிஉயர்ந்ததென்பதை "நிட்டையிலாவுட லீத்தென்னை யாண்ட நிகரிலா வண்ணங்களும்" எனவரும் திருப்பல்லாண்டுச் செய்யுளாலுணர்க.

அருட்கடலே தில்லைவா ழையா விதுகா [ளுந்தி
திருட்குரம்பை தாங்கியலைந் தெய்த்தேன்—றெருட்கோ
மேலிப் பிறவியற வீட்டி விதேகமுத்தி
பாலிப்பை யோர்சொற் பகர்ந்து. கூகூ

பகவனைத் தில்லைப் பதிவதியு மானை
முகவனைத் தாழ்ந்தேத்தி முன்னி——யிகபரத்துச்
சிற்றின்ப போகந் திளைத்துச் சிவாநந்த
முற்றின்பொ டோங்கிற் றுலகு. க00

தில்லைக்கற்பகவிநாயகர்வெண்பாவந்தாதி

முற்றுப்பெற்றது.

ஸ்ரீகுஞ்சிதபாதந்துணை

திருச்சிற்றம்பலம்.

---

க00. தாழ்தல் ஏத்துதல் முன்னுதல் என்னும் மூன்றும் முறையே, காயிக வாசிக மானச கைங்கரியமென்றறிக.

# வாழ்த்து.

---

எண்சீரடி யாசிரியவிருத்தம்.

தில்லைநகர் கற்பகப்பேர்த் தேவ தேவன் *
சித்திபுத்தி சிவகாமி சிற்ச பேசன்
வல்லிதெய்வ யானைகுகன் மறைசி வாக
மம்பசுகண் மணி * நீறை வன்னம் † வாழ்க
செல் ‡ லுதவ சுராரசர் தில்லை வாழ்வே
தியர்மூவா யிரவரன்பர் செழித்து வாழ்க
வல்லவரிவ் வந்தாதி கற்போர் கேட்போர்
வளமைபெறப் பொருளுரைப்போர் வாழ்க வாழ்க

ஸ்ரீ குஞ்சிதபாதந்துணை.

திருச்சிற்றம்பலம்.

---

* கண்மணி - ருத்ராக்ஷம். † ஐவன்னம் - பஞ்சாக்ஷரம்.
‡ செல் - மேகம். உதவ - வியங்கோண் முற்று.

இவ்வந்தாதியின்

## தொண்ணூற்றுமூன்றாஞ்செய்யுள்

# விருத்தியுரை.



வத்துவெலாம் வன்னி மருவிற் பசுமமா
மத்தைத் தகிக்கி னதுவேயாஞ்—சத்ததெனத்
தேறார் புறச்சமயர் தில்லையாய் நீறொழிய
வேறுகுறி மெய்யிடுதல் வீண். ௯௩

உரைவருமாறு!

தில்லையாய் - தில்லைப்பதியி லெழுந்தருளிய விநாயக மூர்த்தியே, —வத்து எலாம் வன்னிமருவில் பசுமம் ஆம்—உலகத்திலுள்ள பொருள்கள்யாவும் அக்கினியைப்பொருந்துமாயின் தமதியல்புகெட்டு நீறாகிவிடும்,—அத்தைத் தகிக்கின் அதுவே ஆம்–அந்த நீற்றை மீட்டும் அக்கினியிற் புகப்பெய்து எரித்தால் அந்நீறு பிறிதொன்றாய்ப் பரிணமியாது தானேயாய் நிற்கும்,—புறச்சமயர் சத்து அது எனத் தேறார்–(இதனைப் பிரத்தியக்ஷத்திற் கண்டிருந்தும் சைவமொழிந்த) மற்றைச் சமயிகள் அழியாப்பொருளாயுள்ளது அத்திருநீறே என்று தெளிவடையாதவராயினர் (ஆதலால்),—நீறு ஒழிய வேறு குறி மெய் இடுதல் வீண் - திருநீற்றைத்தவிர மற்றை மண் மஞ்சட்பொடி கரிகளாலாய அடையாளங்களை இகபரசாதகப் பொருளென்றெண்ணிச் சரீரத்திற்றரித்தல் வியர்த்தமாம் என்றவாறு.

எல்லாப்பொருள்களும் தன்பாலொடுங்கத் தான் பிறிதொன்றி லொடுங்காமல் நிலைத்துநிற்கும் விபூதியொன்றே யாவரும் அணியத்தக்கதும் புருஷார்த்தங்களைத் தரத்தக்கது மாம் என்பது கருத்து.

இக்கருத்தானே தெய்வப்புலமை ஒளவைப்பிராட்டியாரும் நீதிநூலாகிய நல்வழியில் "நீறில்லா நெற்றிபாழ்" என்று கூறினர். இவ் விபூதிக்கு அணிந்தோரது பாவத்தைக் கெடுத்தலினால் நீறு, பஸ்மம் எனவும், ஆணவமலத்தைக் கழுவுதலினால் சாரம் எனவும், சிவசோதியை விளக்குவதினால் பசிதம் எனவும், மோக்ஷைசுவரியத்தைத் தருதலினால் விபூதி எனவும், பூதப்ரேத பைசாசவிஷாதி பீடைகளணுகவொட்டாது காத்தலினால் காப்பு, ரக்ஷை எனவும், காரணப்பெயர்கள் நூல்களிற் கூறப்பட்டுள்ளன.

இவ்விபூதியின் மகிமையைக் காலாக்நிருத்ரம், பஸ்மஜாபாலம் முதலிய உபநிஷத்துகளும் கோஷிக்கின்றன. மற்றை மண் மஞ்சட்பொடி கரிகளை அம்முதனூல்களிற் கூறக்கண்டிலம்; ஆதலால், அவைகள் வேதபாகியமெனவும், ஆகந்துகமெனவும் அறிந்தொதுக்கத்தக்கனவேயாம். தேவர்களும் திருநீறணிபவர்களேயாம். மேற்காட்டிய இவ்வுண்மைகள் விளங்கத்தான் ஸ்ரீ ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் திருநீற்றுப்பதிகத்தில் "சத்தியமாவதுநீறு, வேதத்திலுள்ளதுநீறு, வானவர்மேலதுநீறு" எனத்திருவாய் மலர்ந்தது.

விட்டுணுமூர்த்தி தேவப்பகுப்புட் பதவியினாலும் சிவபக்தியினாலும் உயர்ந்தவரென்பதையும், அவர் தசாவதாரத்திலும்

அதற்கு முன்னும் பின்னும் விபூதிருத்ராக்ஷதாரணராய்ச் சிவ பூசைபண்ணி எண்ணிய வெண்ணியாங்கெய்திய திண்ணிய ரென்பதையும், வைதிகசைவசாஸ்திர புராணங்களாலும் உலகத் திற்பரவியிருக்கும் க்ஷேத்திரப்பெயர்களாலும் அவைகளிலுள்ள விக்ரகங்களாலும் ஆங்காங்கு வழங்கப்படுஞ் சொற்களாலும் அறி யலாம்; அறிந்துதான் அம்மூர்த்தியைச் சிவபூஜகரெல்லாம் சிவாகமவிதிப்படி ஆவரணதேவதையாகவைத்துப் பூசித்துவரு கின்றனர். அம்மூர்த்திக்குத்தொண்டுசெய்த ஆழ்வாராதி அடிய வர்களும் அம்மூர்த்தியைப்போலவே சிவசிந்நதாரணர்களே ன்றே தெரிகிறது. சிவசிந்நதாரணமில்லாத விட்டுணுவிக்ரகம் விக்ரகமல்ல வேறுயாதோ; அத்தாரணமின்றி அம்மூர்த்தியை வழிபடுவோரும் அவர்க்கடியவரல்லர் வேறுயாரோ, இவ்வுலகத் தில் சிவக்ஷேத்திரம் பலவற்றுள் சிவ்துவிசர்களுடைய பூசை யில் விட்டுணு லக்ஷ்மிவிக்ரகங்கள் கூடியுந் தனித்தும் அநேக மிருக்கின்றன. அவைகளுக்கு மண்ணுதிகுறிகளை இவர்க ளிடுவதில்லை; ஆனால் விட்டுணுவாலயமென்று சொல்லப்படு மிடங்களில் சிவசிந்நதாரணநுஷ்டானங்களைத் தற்காலம் காணு மையை நினைத்து மேற்கூறிய விஷயத்தில் ஐயம் வேண்டாம்; ஆழ்வாராதிகள் காலத்தில் அவ்விடங்களில் அவ்வநுஷ்டான முண்டென்பது நிச்சந்தேகம்; எதனுலென்முற் கூறுதும்:—அவ் விட்டுணுமதத்திற்கு முக்கியமான நூல் திருவாய்மொழியெ னும் நாலாயிரப்பிரபந்தமேயாம்; அந்நூலில் நம்மாழ்வாரென் பவர் ஒருசெய்யுளில் "கரிய மேனிமிசை வெளிய நீறுசிறி தேயிடும் பெரியகோலத் தடங்கண்ணன்" எனவும் மற்றொரு

செய்யுளில் "நீறுசெவ்வே யிடக்காணி னெடுமா லடியா ரென்றோடும்" எனவும், பெரியாழ்வாரென்பவர் பல செய்யுள்களில் "காப்பிடவாராய், காப்பிடவாராய்" எனவும் கூறியிருத்தலே அதற்குத்தக்க சாக்ஷியாம்; அவ்வாறு கூறியிருப்பினும் சிவசிந்தாரணநுஷ்டானம் அவ்வாழ்வாராதிகட்கு இராதெனச் சில நவீனர்கள் கூறுவரேல் அந்த ஆழ்வாராதிகள் "கனவினு மின்னாது மன்னோ வினைவேறு - சொல்வேறுபட்டார்தொடர்பு" என்னும் நீதித்திருக்குறட்பாவை யுணர்ந்தோராதலிற் சொல் லொருவிதஞ் செயலொருவிதமிருக்க மார்க்கமில்லை யென மறுக்க; இன்னமும் விட்டுணுமூர்த்திக்குக் கிருஷ்ணாவதாரத்தில் அத்தியந்த சிநேகர்களாயும் மைத்துனர்களாயும் உள்ள பாண்டவர்களும் அவர்களுதித்த குருகுலத்தவரும் விபூதியிட்டுச் சிவபூசை செய்து வந்தனரென்பதைக் காட்டுதும்; கிருஷ்ணலீலைமயமான வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் "பூதி நலந்திகழ் பூரு குலத்திற்—காதிப னாகி யநங்கனை வென்றோன்" எனவும் "தொழுது நெற்றியின் விபூதியா லன்னைதன் றனை யடித் துசணிக்கி" எனவும் "மங்கைபாகனைப் புரிந்தில னின்னமும் பூசை யென்றனன்" எனவும் கூறப்பட்ட செய்யுட்களே ஸ்பஷ்டமாய் வெளியாக்குகின்றன. சேர சோழ பாண்டிய முக்குலபரம்பரைகளும் சிவசிந்தாரண சிவபூசையுடையன வென்பது புராண ப்ரசித்தம்; இதுநிற்க.

இவ்வுலகத்திலுள்ள வைணவர், மாத்துவர், க்ஷமணர், முகம்மதியர்களிற் பண்டிதராயுள்ளவர்கள் பிசாசோட்டவும், விடந்தீர்க்கவும், விபூதியையே கைக்கொண்டு அபிமந்திரித்

துபயோகிப்பதனையும் அதனால் அப்பீடைகள் நிவிர்த்தியாவதனை யும் நேரிற்பார்க்கின்றோம்; இது இக்காலத்தில் அநுபவசித்தம்.

நாலடியாரென்னும் நீதிநூல் வெகுகாலத்திற்குமுன் விபூதி யிடாத க்ஷமணமுநிவர்களாற் செய்யப்பட்டதன்றோ; அவர்கள் வேறு மதத்தராயிருந்தும் அந்நூலுள் "சினமின்மை" என்ற அதிகாரத்தில் ௬ - வது செய்யுளில் உவமைகாட்டவேண்டிய விடத்துத் திருநீற்றைக்கண்ட விஷவேகங் கெடுவதுபோல வென்னும் பொருளமைய "ஒல்லை யிடுநீற்றுற்பையவிந்த நாகம் போல்" என்றுகூறியிருக்கின்றமையால் அக்காலத்திலும் அநு பவசித்தமென்றே நிச்சயிக்கத்தக்கதென்றுணர்க.

இவையெல்லாம் பூர்வபுண்ய புஷ்டியுடையார்க்கே பருத்தறியவரும்; ஆதலால், விபூதியே சுருதி, யுக்தி, அநுபவம் என்னும் மூன்று பிரமாணங்களாலும் மநுஷ்யஜன்மாவுக்கு இன்றியமையாததாயும் இம்மை மறுமைப்பயன்களைக் கொடுத்து ஈடேற்றத்தக்கதாயும் உள்ள உத்தமவஸ்து என்பது சத்தியம் சத்தியம் முக்காலுஞ் சத்தியம். சுபம்.

தொண்ணூற்றுமூன்றுஞ்செய்யுள்விருத்தியுரை

முற்றிற்று.

ஸ்ரீ குஞ்சிதபாதந்துணை.

திருச்சிற்றம்பலம்.